# ஊத்துமலை ஜமீன் வரலாறு






Dr. ந.இராசையா M.A., M.ed.,Phd.,

| | |
|---|---|
| நூலின் பெயர் | ஊத்துமலைஜமீன் வரலாறு |
| ஆசிரியர் | Dr. ந.இராசையா M.A., M.Ed.,Phd., |
| பதிப்பு | முதல் பதிப்பு 1999 |
| பக்கங்கள் | 28 |
| உரிமை | ஆசிரியருக்கு |
| படிகள் | 1000 |
| அச்சகம் | A.D.J.ஆப்செட், பாளையங்கோட்டை |
| கணனி வடிவமைப்பு | பிரைட்சன் கம்ப்யூட்டர்ஸ்,<br>9/15 ஜிலானி காம்ப்ளக்ஸ்,<br>பேரின்பவிலாஸ் தியேட்டர்ரோடு,<br>திருநெல்வேலி 627 001. |
| எழுத்தின் அளவு | 12 புள்ளிகள் |
| தாளின் அளவு | 18.6 கி.கி. |



ஸ்ரீ நவநீதகிருஷ்ண சுவாமி திருகோவிலின் முன் புறத்தேற்றம்



மன்னர் N.H.M. பாண்டியன்



மன்னர் சிவஞானமருதப்ப பாண்டியன்

# ஊத்துமலை ஜமீன் வரலாறு

தமிழகத்தின் தென்பகுதிகளில் குறுநில மன்னர்கள் ஆண்டு வந்தனர்.அவர்களைப் பாளையக்காரர்கள் என்று அழைத்தனர். பாளையக்காரர்கள். தனியாக இருக்காமல் மற்ற பாளையக்காரர்களோடு சேர்ந்தே இருந்தார்கள்.மேற்குப் பகுதியில் மறவர் பாளையக்காரர்கள் சேர்ந்து இருந்ததைப் போன்று கிழக்குப் பகுதியில் நாயக்கர் பாளையக்காரர்களும் சேர்ந்து இருந்தனர்.

திருநெல்வேலிச் சீமையிலுள்ள மறவர் பாளையக்காரர்கள் அனைவரும். இராமநாதபுரம் பகுதியிலுள்ள "கிழவை" நாட்டிலிருந்து வந்தவர்களென " வாள் எழுபது " என்னும் நூலில் ஆசீர்வாதத்தேவர் பக்கம் 116 ல் கூறுகிறார். அவ்வாறு இராமநாதபுரத்திலிருந்து வந்த பாளையங்களில் ஒன்றுதான் ஊத்துமலை ஜமீன்.

ஊத்துமலை ஜமீன் வம்சாவழியினர் மறவர் இனத்தில் கொண்டையங் கோட்டைப் பிரிவைச் சேர்ந்தவர்களாவர்.

மதுரை மன்னன் விசுவநாதநாயக்கர் காலத்தில் பிரிக்கப்பட்ட 72 பாளையங்களில். ஊத்துமலைப் பாளையமும் ஒன்றாகும். 148 கிராமங்களைக் கொண்ட பெரியபாளையம். சுரண்டை ஜமீன் ஊத்துமலை ஜமீனுடன் இணைக்கப்பட்டது,

ஊர்க்காடு, சுரண்டை, நடுவக்குறிச்சி, தலைவன் கோட்டை, சொக்கம்பட்டி, நெற்கட்டும் செவல் (ஆவுடையாபுரம்), அழகாபுரி, தென்மலை, சிவகிரி , சேத்தூர், கொல்லங் கொண்டான், குருக்கள்பட்டி, சிங்கம்பட்டி, மணியாச்சி, கடம்பூர், ஊத்துமலை ஆகியவை மறவர் பாளையங்களாகும்.

பாண்டிய மன்னனுக்குச் சகல உதவிகளும் செய்து, நாட்டில் அமைதி ஏற்படக் காரணமாக இருந்த மறவர்களுக்கெல்லாம் பட்டங்களும், பதவிகளும் வழங்கப்பட்டன.

ஊத்துமலை ஜமீன்தாருக்கு விஜயகுணராம பாண்டியன் என்ற பட்டமும். உபய சாமரம், புலிக்கொடி, மகரக்கொடி, இந்திரனின் கொடியான வலரிக்கொடி ஆகியவற்றை பாண்டிய மன்னன் பல்வேறு கால கட்டங்களில் செயல் திறனுக்கு தக்க வழங்கினான்.

பாண்டியர், மதுரையிலிந்து தெற்கே திருநெல்வேலிச் சீமையிலுள்ள உக்கிரன்கோட்டைக்கு வந்து அரசு செலுத்தி வந்தனர். உக்கிரன்கோட்டையினைச் சுற்றியுள்ள குரும்பர்களது தொல்லைகளை ஊத்துமலை மன்னர் அடக்கியதால் ஊத்துமலைப் பாளையம் வழங்கப்பட்டதாகவும், அந்த பகுதியிலுள்ள புதர்க்காடுகளை அழித்து ஊத்துமலை ஊரை உண்டாக்கி கோட்டை கட்டப்பட்டதாகவும் வரலாறு கூறுகிறது.

வேறு ஒரு ஆய்வின்படி ஊத்துமலை மன்னர் சேரநாட்டிலிருந்து பிரிந்து கிழக்கே வந்து அரசு ஏற்படுத்தியதாகவும் அதனாலேதான் மறவர் பாளையத்தில் ஊத்துமலை மட்டும் வைணவ மதத்தை சார்ந்தவர்கள் என தெரியவருகிறது.

டானா என இப்பொழுது வழங்கப்படும் இடத்துக்கு வடக்கு முதல் கோட்டையை நிர்மாணித்ததாகவும், இரண்டாவதாக இன்றைய ஊத்துமலை நகருக்கு வடக்கு வையம் தொழுவான் பாறை என்ற இடத்தில் கோட்டை அமைத்திருக்கின்றனர், மூன்றாவதாக வீரகேரளம்புதுாரைத் தலைநகரமாக மாற்றியபின் ஊத்துமலையில் அரண்மனை இருந்த கோட்டையை R.C. சர்ச்க்கு பள்ளிக் கூடம் நடத்தும் வகைக்கு இலவசமாக கொடுக்கப்பட்டது.

வல்லப மகாராஜா (1534 - 1543) தென்காசியினை தலைநகரமாகக் கொண்டு ஆண்டு வந்தான். இவன் சடாவர்மன் சீவல்லவனாக இருத்தல் வேண்டும், இவன் நடத்திய நவராத்திரி விழாவிற்கு ஊத்துமலை மன்னர் சென்று சிறப்புச் செய்தார் என்று கூறுவதிலிருந்து ஊத்துமலை மன்னரின் புகழ் விளங்கி வந்தது தெரியவருகிறது. அது முதல் தென்காசி ஸ்ரீ காசிவிஸ்வநாதர் திருக்கோவில் தெப்பத்திருவிழாவினை ஊத்துமலை மன்னர் நடத்தி வந்திருக்கின்றனர்.

பாண்டியன் அரண்மனையில் தசரா விழா நடைபெற்றுக்கொண்டிருக்கும்போது, ஒருநாள் இருயானைகள் சண்டையிடுவதற்காக வந்த போது, ஒரு யானை தப்பிச் சென்று வீதியிலுள்ள பொதுமக்களைக் கொல்லும் நிலையில் ஊத்துமலை மன்னர், அந்த யானையை அடக்கினார். இதனால் பாண்டிய மன்னன், அந்த யானையில் மேல் ஊத்துமலையாரை ஏற்றி மேளதாளத்துடன் வீதிவழியே உலா வரச் செய்தார். யானையைப் பிடித்து அடக்கிய வீரர் என்னும் பட்டத்தை வழங்கி ஏராளமான பரிசுகளை வழங்கினான் பாண்டிய மன்னன்.

மதுரையில் பாண்டிய மன்னர்களது அரசுரிமை நாயக்க மன்னர்களுக்குச் சென்றபோது, மதுரை கோட்டையிலுள்ள 72 கொத்தளங்களுக்கு 72 பாளையக்காரர்களையும் நியமித்தார். விஸ்வநாத நாயக்கர், ஊத்துமலை பாளையக்காரரும் கோட்டையின் ஒரு கொத்தளத்திற்கு மேற்பார்வையாளராக நியமிக்கப்பட்டார்.

மதுரையில் நாயக்கர் ஆட்சியை ஒழித்து விட்டு பாண்டியர் ஆட்சியை மீண்டும் நிலை நிறுத்த மாவீரன் பூலித்தேவன் தலைமையில் ஐந்து கோட்டைகள் எழுந்தன. அதில் முக்கியமான ஒன்று ஊத்துமலையாகும். ஊத்துமலையில் கட்டப்பட்ட கோட்டைக்கு, பஞ்சபாண்டியர்களில் ஒருவரான " மாறவர்மன் கோட்டை " என்னும் பெயர் சூட்டப்பட்டது,

ஊற்று உள்ள மலை ஊற்றுமலை எனப் பெயர் கொண்டு அதுவே மருவி ஊத்துமலை என்று வழங்கலாயிற்று. ஷ ஊத்துமலை ஜமீன் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளது.

ஊத்துமலை ஜமீனின் தலைநகரமாக வீரகேரளம்புதுார் பின்காலத்தில் விளங்கி வருகின்றது. வீரகேரளம்புதுார் சிற்றாற்றங்கரையில் அழகாக உள்ளது. இவ்வூரில் ஊத்துமலை ஜமீந்தாரின் அரண்மனை உள்ளது. இந்த அரண்மனையில் நடுவில் சிற்றாறு ஓடி வருவது மிகுந்த சிறப்பைக் கொடுக்கிறது. தென் மாவட்டத்திலுள்ள பாளையங்களில் ஊத்துமலை அரண்மனையைப் போல் சிறப்புடையது வேறு இல்லை.

வீரகேரளம்புதுாரைப்பற்றி வரலாற்றில் சிலசெய்திகள் வருகின்றன. ஊத்துமலையை ஆட்சிசெய்த பாண்டியமன்னன் வீரகேரளகுல வர்மன்

(1021 - 1028) என்னும் அரசன் பெயரால் இவ்வூர் ஏற்பட்டிருக்கக்கூடும் என்று அறிஞர் சதாசிவப்பண்டாரத்தாரின் பாண்டிய வரலாறு கூறுகிறது.

தவிர வீரகேரளம்புதூர் நகரை நிர்மாணித்த சமயம் அதன் திறப்பு விழாவிற்கு அப்போதைய சேர மன்னனை அழைத்து சிறப்பிக்கப்பட்டதாகவும் சேர மன்னன் விழாவுக்கு வந்து பார்த்ததில் இங்குள்ள மக்கள் வீரமாக இருப்பதையும் இப்பகுதி கேரளா மாதிரி செழிப்புடன் இருப்பதையும் கண்டு புதிய ஊரான இதுக்கு வீரகேரளம்புதூர் என ஷ சேர மன்னன் பெயர் சூட்டியதாகவும் கூறப்படுகிறது. சேர மன்னர் தன் நாட்டுக்கு திரும்பும் வேளையில் ஊத்துமலை மன்னர் ஓர் விநாயகர் சிலையை பரிசாக அளித்ததை செங்கோட்டையில் பிரதிஸ்டை செய்து அத்தெருவுக்கு வீரகேரள விநாயகர் தெரு என்ற பெயர் இன்றும் விளங்குகிறது. ஆதிகாலம் முதல் வீரகேரளம்புதூரில் " பழம் தின்னும் வௌவ்வால் " ஊத்துமலை மன்னர்களால் நாளது தேதி வரை பாதுகாக்கப்பட்டுவருகிறது.

கேரளம் என்னும் பெயருக்கு ஏற்ப இவ்வூர் கேரள நாட்டின் சாயலைக் கொண்டுள்ளது. தென்னை, மா, பலா, வாழை ஆகிய மரங்கள் செழிப்பாக உள்ளன. இவ்வூரிலுள்ள தெப்பத்திலுள்ள மண்டபம் கேரள கட்டிடக்கலையை ஒத்திருப்பது இதன் சிறப்பைக் காட்டுகிறது.

தென்காசியைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சிசெய்த பாண்டிய மன்னன் சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் (1422 - 1463) மன்னனுக்கு ஊத்துமலை பாளையக்காரர் உதவி, பகைவர்களை விரட்டி அடித்ததாக இராசசேகர தங்கமணி எழுதிய பாண்டிய வரலாற்றில் பக்கம் 613 இல் குறிப்பிட்டுள்ளார். இதுபோன்று இன்னும் ஏராளமான சான்றுகள் பெற்றுப் பெருமையுடன் விளங்குகிறது வீரகேரளம்புதூர்.

ஊத்துமலையிலிருந்து 1803 ஆம் ஆண்டு வீரகேரளம்புதூருக்குத் தலைமையிடம் மாற்றப்பட்டதாகக் குறிப்புகள் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

மருதப்பபூபதி மன்னர் காலத்தில் வீரகேரளம்புதூர் "மருதபூபதி" என்னும் பெயரை பெற்றிருந்தது.

ஊத்துமலை ஜமீன் வம்சா வழியைப் பற்றி மூலச் செய்திகளை, பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி மற்றும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் காலின்மெக்கன்சி என்பவரால் சேகரிக்கப்பட்டதாகும். இவர்

தயாரித்த மூலப் பிரதியில் ஊத்துமலே ஜமீன்தார் கையெழுத்து உள்ளது. இந்த பிரதி தற்போது சென்னை அரசினர் ஓரியண்டல் கையெழுத்துப்பிரதி நூலகத்தில் டி, 3583 எண்ணுள்ள பகுதியில் உள்ளது.

மறவரினத்தவரும், மறவர் பாளையக்காரர்களும் சைவ சமயத்தைத் சார்ந்திருக்கும் போது, ஊத்துமலே மறவர்களும், ஊத்துமலே ஜமீன்தார்களும் வைணவ மதத்தைச் சாந்தவர்களாக விளங்கினர் ஊத்துமலை மன்னர்களில் குலதெய்வம் ஸ்ரீ நவநீதகிருஷ்ணசாமி என்பதாகும்.

நான்குநேரி ஸ்ரீ வானமாமலை ஜீயர் சுவாமி மடத்துக்கும் ஊத்துமலே மன்னருக்கும் மிக நெருங்கிய தொடர்பு இருந்து வந்திருக்கிறது.

ஊத்துமலே ஜமீன்தார் இருதாலய மருதப்பதேவருடைய கல்வி அறிவும், ஆற்றலும், நற்குணங்களும் மிக உயர்ந்தவை. தமிழ் வித்வான்களிடத்தும், சங்கீத வித்வான்களிடத்தும் அவர் மிகுந்த அன்புகொண்டிருந்தார். காலங்களை வகுத்துக்கொண்டு திட்டமிட்டுச் செயலாற்றுவார். இத்தகவல்களை டாக்டர் உ.வே. சாமிநாதையர் எழுதிய "நான் கண்டதும் கேட்டதும்" என்னும் நூலில் பக்கம் 24 இல் குறிப்பிட்டுள்ளார்.

கலைகளை வளர்த்தும், தமிழ் மொழியை ஆதரித்தும் கலைஞர்களைப் போற்றிவந்தனர் ஊத்துமலே மன்னர்கள். அரண்மனையிலுள்ள பல ஏடுகளை இருதலாய மருதப்ப பாண்டியன் காலத்தில் உ.வே.சாமிநாதையருக்கு(2 வில் வண்டிகள் நிரம்ப) வழங்கப் பெற்றதாக சோமலே எழுதியுள்ள திருநெல்வேலி மாவட்ட குறிப்பு நூலில் பக்கம் 404 இல் குறிப்பிட்டுள்ளார். அதிகமான ஓலைச் சுவடிகள் இன்றும் உள்ளது அரண்மனேயில்.

ஒருசமயம் உ.வே.சாமிநாதைய்யர் மன்னர் மருதப்பதேவரைப் பார்ப்பதற்காக வீரகேரளம்புதுாருக்கு ஒருமாட்டு வண்டியில் வந்தார். வீரகேரளம்புதுாருக்கு பக்கத்தில் உ.வே.சாமிநாதைய்யர் வந்தபோது, வேட்டைக்காரர்கோலத்தில் வந்து நின்ற மருதப்ப மன்னரைப் பார்த்து அதிசயித்துப் போனார். மன்னர் வேட்டைக்குச் சென்ற சமயம் எதிர்வந்த ஷ புலவரை வரவேற்று, அரண்மனேயில் தங்க வசதி செய்து கொடுக்க பணியாளர்களை ஏவினார். தானும் துரிதமாக வேட்டையை முடித்துக்கொண்டு அரண்மனை வந்து புலவருடன் கலந்துரையாற்றினார். தமிழுக்கு மரியாதை கொடுக்கும் பண்பாளர் மருதப்ப மன்னர் என்று உ.வே.சாமிநாதய்யர்

புகழ்ந்துள்ளார்.

இருதலாய மருதப்பத்தேவர், தமிழ் வித்வான்கள் பலரை ஆதரித்துத் தமிழை வளர்த்துவந்தார். சங்கரநமச்சிவாயர் என்னும் புலவரை ஆதரித்து நன்னூலுக்கு உரை எழுதச் செய்தார். மாதம் ஒன்றுக்கு நான்கு கோட்டை நெல்லும், தினந்தோறும் ஒருபடி பாலும் கொடுக்கப்பட்டு வந்தது.

தொல்காப்பியத்துக்கும் உரை ஊத்துமலை மன்னரால் எழுதச் செய்யப்பட்டது என்றும் ஓ உரை திருவனந்தபுரம் அரசு காப்பகத்தில் இருப்பதாகவும் கூறப்படுகிறது..

ஊத்துமலை மன்னர் மருதப்பத்தேவர் மீது 344 பாடல்களை அண்ணாமலை ரெட்டியார் பாடியுள்ளார், தமிழ்ப்புலவர்களை எப்போதும் மறவாமல் உதவி செய்து வரும் அருளாளர் என்று அண்ணாமலை ரெட்டியார், மருதப்பத் தேவரைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

ஒரு சமயம் மருதப்பத்தேவர் கழுகுமலை முருகனை தரிசிக்க கால் நடையாகச் சென்றார். அப்போது பயணம் எழிமையாக அமைய காவடிச்சிந்து பாடல்களை அண்ணாமலை ரெட்டியார் பாடிக்கொண்டே சென்றார்.

இப்பாடல்களைப் புலமை படைத்த ஊத்துமலை மன்னரே இயற்றியதாகவும் குரல் நயம் படைத்த அண்ணாமலைக் கவிராயரைப் பாடக் கூறியதாகவும் கூறப்படுகிறது. இப்பாடல்களை நூலாக வெயிட்டார் மருதப்பர்.

ஒரு நாள் மருதப்பதேவர் அண்ணாமலைக் கவிராயருடன் உரையாற்றிக் கொண்டிருக்கும் போது ராணி மீனாட்சி சுந்தரநாச்சியார் அங்கு வரக் கண்ட கவிராயர் எழுந்து மரியாதை செலுத்தி "தங்கச்சி வந்தியா" என கேட்க ராணிக்கு கோபம் வர இது கண்ட மன்னர் சிரித்திருக்கிறார், தலையில் சூடி இருக்கிற அலங்கார நகை "தங்கத்தால் செய்த செவ்வந்தி பூவா " என்று பொருள்பட கவிராயர் கேட்டதாக மன்னர் கூறினார்.

கடிகை முத்துப் புலவர் மருதப்ப மன்னர் மீது "மதனவித்தார மாலை" என்னும் நூலை எழுதியுள்ளார்.

கன்றாப்பூர் கவிராயர் "மருதப்பன் திருவருட்பாமாலை" என்னும் நூலை எழுதியுள்ளார். இந்நூலில் சங்கரநாராயண சுவாமி கோயிலுக்குத் திருப்பணியும் செய்துள்ளமை குறிப்பிடப்பட்டுள்ளது.

"மருதபாண்டியர் கும்மி"என்னும் நூலை உலகத் தமிழ் ஆராய்ச்சி

நிறுவனம் வெளியிட்டுள்ளது.

மருதப்பத்தேவர் பிள்ளைப் பேறு வேண்டி காசிக்கு சென்றபோது புளியங்குடி முத்து வீரக் கவிராயர் ஒரு நூல் எழுதியுள்ளார். இந்நூல் அரண்மனையின் அலங்காரத்தைப் பற்றியும், மருதப்பரின் செல்வ வாழ்வை வருணித்து எழுதப்பட்டுள்ளது.

தமிழ்ப் புலமைமிக்க மருதப்பர், ஊத்துமலை ஜமீன் எல்லைகளை எட்டுத் திசைகளிலும் அளந்து வரையறுத்தார். ஊரில் நல்ல சாலைகளை அமைத்தார். நிழல் தரும் மரங்களை வளர்த்தார். சாலை ஓரத்தில் நந்தவனங்களை உண்டாக்கினார். வெட்டப்பட்ட கிணறுகள் இன்றும் உள்ளது.

ஊத்துமலை அரண்மனையின் (வீரகேரளம்புதுாரில்) பக்கத்தில் தென்புறத்தில் ஸ்ரீ நவநீதகிருஷ்ணசாமி கோயில் உள்ளது. அங்கே நித்திய நைவேத்தியங்கள் சிறப்பாக நடைபெறும். அதற்குரிய நித்திய படித்தரம் பத்துவராகன், லாடு, லட்டு, சிலேபி, தேன்குழல் முதலியவைகள் இறைவனுக்கு நிவேதனம் செய்யப்படும். ஒரு லாடு உரித்த தேங்காய் அளவுக்கு இருக்கும். தேன்குழல் பெரிய சந்தனக்கல் அளவுக்கு இருக்கும். இவ்வளவு விசேசமான நைவேத்தியங்களை ஒவ்வெருநாளும் காணலாம்.

இன்றைய தமிழ்நாடு அரசு HR & CE ன் பிடியில் ஆலயம் சிக்கி, நசுங்கி, நலிந்த நிலையிலும் இக்கோவில் காரியங்கள் தடையின்றி நடைபெறுகின்றது. இக்கோவிலுக்கு நன்செய் 472 ஏக்கர் 30 சென்ட் புன்செய் 221.19 காலிமனை 7 தோப்பு3 கட்டிடம் 3 அன்னதான சத்திரம் 1 ஆலயத்துக்கு வரவேண்டிய குத்தகை பாக்கி 1408 பசலி முடிய பணமாக ரூபாய் 6,97,771.24/- நெல்லாக 3044 கோட்டை 12 மரக்கால் 5 படி என தெரிகிறது. மேற்படி குத்தகை பாக்கிகளை பற்றி அரசும், H.R.& C.E. துறையும் கண்டு கொள்வது இல்லை. நில வருவாயை நம்பி இயங்கும் ஆலய வருவாய்க்கு வழி செய்யாத அரசும் இலாக்காவும் E.O நியமித்து ஆலயத்தை கெடுபிடி செய்வதேனோ.

தடையின்றி நடந்து கொண்டிருக்கும் ஆறு வேளை பூஜை விபரம்.

1. விஸ்வரூபம் காலை 5½ முதல் 6
2. திருமஞ்சனம் 6½ முதல் 7½
3. காலசாந்தி 9½ முதல் 10
4. உச்சிதாலம் 10½ முதல் 11
5. சாயாட்சை 6½ முதல் 7¼
6. அர்த்தசாமம் 7¾ முதல் 8¼

ஜமீன் ஸ்ரீ நவநீதகிருஷ்ணசுவாமி கோவிலுக்கு

1. வீரகேரளம்புதூர்
2. கலிங்கப்பட்டி
3. வடக்கு கிருஷ்ணபேரி
4. ராஜகோபாலபேரி
5. அச்சங்குண்டம்
6. மேல கிருஷ்ணபேரி
7. முத்துகிருஷ்ணபேரி ஆகிய கிராமங்களை கொடையாக ஊத்துமலை மன்னர் வழங்கியுள்ளார்.

Remove the dark nice என்று அறிவிப்பை முதன் முதலில் செயல்படுத்தியது ஊத்துமலை ஜமீன் ஸ்ரீநவநீதகிருஷ்ணன் கோவிலில் தான்.

ஜமீனிலிருந்து ஏழை குடும்பத்து பிள்ளைகள் படிக்க ஜமீன் நவநீதம் நடுநிலைப்பள்ளி என்ற பள்ளிகூடம் நடத்தப்பட்டது.

ராணி மீனாட்சி சுந்தர நாச்சியார் என்பவரால் அன்னதான சத்திரமும் கிணறும் ஏற்படுத்தப்பட்டது.

வாகனங்கள் பத்து மரத்தால் முன்பே செய்யப்பட்டிருந்ததுக்கு மன்னர் மருதப்பரால் வெள்ளி தகடு பொறுத்தப்பட்டது. கொடி மரத்துக்கு சுத்த தங்கத்தால் தகடு பொருத்தப்பட்டது. முன் மன்னர் ஒருவரால் யானை தந்த தகடுகளில் வர்ணம் பூசப்பட்ட பூம்பல்லாக்கு உறுவாக்கப்பட்டு ஸ்ரீநவநீதகிருஷ்ணன் வீதி உலா வந்து கொண்டு இருக்கிறார்.

---

மன்னார்கோவிலில் இருக்கும் கோவிலுக்கு ஜமீனிலிருந்து கொடி மரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஷ கொடிமரத்தில் ஊத்துமலை ஜமீன் பெயர் உள்ளது.

ஆங்கிலேய ஆட்சி காலத்தில் ஷ 7 கிராமங்களுக்காக கோவிலுக்கு கொடுத்து வந்த தொகை 52 ஆண்டுக்கு மேலாகியும் உயர்த்தப்படவில்லை. அதே சமயம் கோவிலிருந்து செலுத்தும் நிலவரி, மின்கட்டணம் H.R.&.C.E.க்கு செலுத்த வேண்டிய கட்டண வகைகள். E.O. சம்பளம் பல மடங்கு உயர்ந்து கொண்டு போவதையும் ஆலய வருவாய் உயர்வுக்கு அரசும் H.R.&C.E. துறையும் வழி செய்யவில்லை என்பதோடு குத்தகை பாக்கி வசூலுக்கு உதவுவதில்லை என்பதையும் உணர்த்தி வருகிறார் கருவூலஜோதிS.M. பாண்டியன்.

தனித்தும் இணைந்தும் மருத்தப என்ற பெயர் ஊத்துமலை மன்னர்களுக்கு இருந்தது. இதன் காரணமாக கிராமங்களுக்கு மருதப்பபுரம் என்றும் நவநீதகிருஷ்ணபுரம் என்று குல தெய்வத்தின் பெயரில் கிராமங்கள் உருவாகி இருக்கிறது.

ஸ்ரீ நவநீதகிருஷ்ண சுவாமிக்கு மன்னர் திருத்தேர் செய்து, தேர் திருவிழா நடத்தினர். இறைவனுக்கு ஏராளமான அணிகலன்களையும் நிலங்களையும் வழங்கினர். ஸ்ரீரங்கம், திருச்செந்தூர், திருநெல்வேலி நெல்லையப்பர் கோவில், திருக்குற்றாலம் மற்றும் ஆலயங்கள் பூஜைகளுக்கு நிலம் எழுதிகொடுத்திருக்கும் விபரம் அரண்மனை நூலகத்தில் உள்ளது.

ஸ்ரீ நவநீதகிருஷ்ணசுவாமி கோயிலுக்கு முன்பு ஆங்கிலேயருக்கு ஆதரவாக ஒரு வளைவு கட்டப்பட்டுள்ளது. அதில் ஒருபக்கம் தமிழும் மற்றொருபக்கம் ஆங்கிலத்திலும் கல் வெட்டு பெறிக்கப்பட்டுள்ளது.

"1911 டிசம்பர் மாதம் 12ம் தேதியாகிய இன்றையதினம் டெல்லி மாநகரில் நடக்கும் மாட்சிமை தங்கிய இந்திய சக்கரவர்த்தி 5வது ஜார்ஜ். சக்கரவர்த்தினி மேரி, இவர்களுடைய மகுடாபிஷேக மகோத்சவக் குறிப்பாக திருநெல்வேலி ஜில்லா, ஊத்துமலை ஜமீன் ராஜா பத்தியுள்ள பிரஜைகளால்

இயற்றப்பட்டது" என்று தமிழ் கல்வெட்டு கூறுகின்றது.

"IN Commennation of the Coronation of Theirimperial Majesties King Gearge V & Queen Mary at Delhi. Thisday 12th December 1911 by the Loyal Subjects of Uthumalai Estate" என்று ஆங்கிலத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

பூசைத்தாயார் என்ற அரசிக்கு துன்பம் ஏற்பட்ட ஒருசமயம்

"தேராடு நின்று தெருவோடலைகிற செய்திதனை
ஆரோடு சொல்லி முறையிடுவோ மிந்த வம்புவியில்
சீரோடு நாமும் நடந்து கொண்டா லிந்த தீவினைகள்
வாரா தடாதம்பி சீவலராய மருதப்பா"

என்னும் கருத்துள்ள பாடலைப் பாடினார். இத்தகைய தமிழப் புலமை வாய்ந்த பூசைத்தாயார் என்ற அரசியரும் ஊத்துமலை ஜமீனில் இருந்தது பெருமையைக் கொடுக்கிறது.

ஆங்கிலேயர் ஆட்சி பொறுப்பு ஏற்று பாளையங்களை கணக்கிட்டது முதல் தற்போதைய ஊத்துமலை ஜமீன்தார் கருவூலஜோதி எஸ்.எம். பாண்டியன் அவர்கள் ஊத்துமலை ஜமீன்தார் 43வது வாரிசுதாரர் என்பதுடன், மாவீரன் பூலித்தேவனின் வாரீசுதாரராகவும் இருக்கிறார் என்பது குறிப்பிடதக்கதாகும். தமிழ் நாடு இயல்இசை நாடக மன்ற தலைவர் நாராயணசாமி வீரகேரளம்புதுார் வந்து விழா ஒன்றில் கலந்துகொண்ட சமயம் எஸ்.எம். பாண்டியனின் கலை நிகழ்ச்சியில் உள்ள ஈடுபாட்டையும் பாடிய பாடலின் திறமையையும் பாராட்டி கருவூலஜோதி என்ற பட்டம் 7:4.1984 வழங்கப்பட்டது.

மருதப்பத்தேவரைப் போல் தலைசிறந்த வேட்டைக்காரராகவும் திகழ்ந்து வருகிறார். மேற்கு தொடர்ச்சி மலையில் அவர் பாதம்படாத இடமே இல்லை எனலாம். மார்பின் இரு பக்கமும் துப்பாக்கி வைத்து பல விதமாக இலகுவில் நொடியில் சுடும் ஆற்றல் படைத்தவா். பள்ளிப்பருவத்தில் கேட்டபில்டு @ ரப்பல் வில் தெரிப்பதில் வல்லுனா். தெய்வீகத்திலும் தேசியத்திலும் அசைக்கமுடியாத நம்பிக்கை கொண்டவர்.

புதிய வைர கடுக்கண்களை மன்னருக்கு ராணி அனுவித்துச் செல்ல ஸ்ரீ கிருஷ்ணன் பாலக உறுவில் நேரடியாக வந்து வைரக் கடுக்கண் தனக்கு வேண்டும் என கேட்டதும் மன்னர் உடனே தாம்பாளத்தில் கழட்டி வைத்து ஆலயத்துக்கு அனுப்பி இருக்கிறார். இது போல் திருநெல்வேலியில் கருவூலஜோதி

எஸ்.எம். பாண்டியன் தன் புதிய கட்டிடத்தின் மாடி எப்படி கட்டலாம் என ஆலோசித்து கொண்டிருக்கும் வேளையில் ஸ்ரீ கிருஷ்ணன் வந்து எனக்கு மேலே மொட்டையாக இருக்கிறது நீ வேறு எதையோ பற்றி சிந்தித்துக் கொண்டிருக்கிறாயே என்று கூற உடனடியாக அரண்மனைக்கு வந்து வாயு வேகத்தில் செயல்பட்டு 25.10.1996 தேதியில் ஊத்துமலை ஜமீன் ஸ்ரீநவநீதகிருஷ்ணன் கோவிலுக்கு தனது சொந்த பணத்தில் சம்பரோட்கூணமும் புண்ணிய வாசனம் செய்து புதிய கோபுர கலசமும். கொடிமரத்துக்கு புதிய தகடுகள் பொருத்தி வழிபட்டார். தெய்வீக காரியத்தில் மிகவும் ஐதீக மானவர். ஷ கோவிலில் இம் மன்னர் முன் நின்று நடத்தி வைக்கும் திருமண தம்பதியினர் சகல பாக்கியமும் பெற்று இன்புற்று வாழ்கின்றனர். ஜமீன் பகுதி ஆலய விழாக்களில் கலந்து சிறப்பிக்கிறார்.

கோவில் திருட்டு விபரம் வீரகேரளம்புதுார் காவல்நிலையத்தில் புகார்

FIR 32/92 13.3.92
FIR 128/92 28.7 92
FIR 157/92 13.9.92

அரண்மனை எடுபிடி வேலைக்கு வெளியூரிலிருந்து வந்து ஏமாற்றி சொத்துபெற்ற வீட்டினரின் துாண்டுதலினால்ஆலய பணியாளர்களை காவல்துறையினர் இம்சித்து ஊனமாக்கியுள்ளனர். பதிவான கைரேகைப்படி திருடியவனை பிடிக்கவில்லை.

ஸ்ரீ நவநீதகிருஷ்ணசுவாமி கோயிலுக்குப் பரம்பரை தர்மகர்த்தாவாகவும், தேவர் பேரவையின் மாநிலத் துணைத் தலைவராகவும், இந்து கோயில்களின் கூட்டமைப்பினை தோற்றுவித்தவராகவும், மற்றும் பல பொது அமைப்புகளிலும் அங்கம் வகித்து வருகிறார். ஜமீன்தார் அரண்மனைக் காரியங்களையும் கவனித்துவிட்டு பொது அமைப்புகளிலும் ஈடுபாடு வைத்துக் கொள்வது என்பது இயல்பான காரியமல்ல. ஆனால்

கருவூலஜோதி எஸ்.எம்.பாண்டியன் அவர்கள் மிகவும் எளிதாகச் செயல்புரியும் செயல்வீரராவார். கல்வி பயின்ற காலத்தில் மாநில, மத்திய அரசு விளையாட்டு போட்டிகளில் கலந்து சாதனைகள் செய்து பல பரிசுகளை பெற்றிருக்கிறார்.

மாவீரன் பூலித்தேவன் இயக்கத்தில் அதிக ஈடுபாடுகொண்ட ஊத்துமலை ஜமீன்தார் கருவூலஜோதி எஸ்.எம். பாண்டியன் அவர்கள் தொடர்ந்து செயல்பட்டு வருகிறார். மாவீரன் பூலித்தேவனுக்கு நினைவுக் கோட்டையும், சிலையும் எழுப்பவேண்டும், அவர் பெயரால் மாவட்டம், பல்கலைக்கழகம், போக்குவரத்துக் கழகம் ஆகியவற்றை ஏற்படுத்த வேண்டும். அஞ்சல்தலை வெளியிடுவதுடன் வாரிசுதாரர்களுக்கு உதவித்தொகையும், வேலைவாய்ப்பில் முன்னுரிமையும் வழங்கவேண்டும். தமிழ்நாடு பாடநூல் நிறுவனத்தின் மூலம் அரசு பாடப் புத்தகத்தில் மாவீரன் பூலித்தேவன் வரலாற்றை வெளியிடவேண்டும், மாவீரன் பூலித்தேவனின் பிறந்தநாளை விழாவாகக் கொண்டாடவேண்டும். மற்றும் பல கோரிக்கைகளை வலியுறுத்தி சுமார் 18 ஆண்டுகளாக குரல் கொடுத்துக்கொண்டு வருகிறார்.

மன்னர் பூலிதேவருக்கு பெருமை சேர்க்கும் வகையில் செம்பட்டியில் ஆங்கிலேயரால் தூக்கிலிடப்பட்ட மருதநாயகம் என்ற பெயரை மாற்றிக் கொண்ட துரோகி முகமது யூசுப்கான் என்ற கான்சாகிப் பற்றி "துரோகிக்கு கிடைத்த தண்டனை" என்ற கட்டுரையை புதிய கோணம் என்ற மாத இதழில் தொடராக பல மாதங்கள் எழுதியுள்ளார்.

ஸ்ரீ சங்கரநாராயண சுவாமி கோயிலில் உள்ள மன்னர் பூலித்தேவர் அறையில் மன்னரின் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாக அனைவரும் பார்த்துப் படிக்கும் படியாக எழுதி வைத்திருக்கிறார்.

17 ஜூலை 1986ல் வீரவாஞ்சிநாதன் சிலை செங்கோட்டையில் நிறுவ செய்ய இதன் இயக்கத்தின் செயலாளராக இருந்துபாடுபட்டார்.

கோரிக்கையை வலியுறுத்தி கால்நடைப் பயணம், உண்ணாவிரம் போன்ற சாத்வீக சத்தியாக்கிரகப் போராட்டங்களை நடத்திவந்தார். அரசு போக்குவரத்து வண்டிகளில் பூலித்தேவன் போக்குவரத்து கழகம் என்று வண்ணங்களால் எழுதிவந்தார்.

கோரிக்கைகளை வலியுறுத்தித் துண்டுப் பிரசுரங்களும், சுவரொட்டிகளும் வெளியிட்டு வந்தார்.

பொதுக் கூட்டங்களும் மிகவும் சிறப்பாக நடத்தி

வந்தார்.

திருநெல்வேலிக்கு வருகைதந்த பெரிய தலைவர்களான கலைஞர் கருணாநிதி, எம்.ஜி.ஆர்., ஜெயலலிதா, ராஜீவ் காந்தி போன்றவர்களிடம் நேரடியாகக் கோரிக்கைகளை வற்புறுத்தி மனுக்களை வழங்கியுள்ளார். மற்ற மாவட்டங்களுக்குத் தலைவர்களின் பெயர் வைத்திருப்பது போல் திருநெல்வேலி மாவட்டத்துக்கு முதல் சுதந்திர போராட்ட வீரர் நெற்கட்டும்செவல் மன்னர் பூலித்தேவர் பெயர் சூட்ட T.A.K. இலக்குமணன் முன்னிலையில் முதல்வரிடம் கேட்டுக்கொண்டார். ஆனால் அன்றும் தமிழக முதல்வராக இருந்த Dr.கருணாநிதியோ மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகம் இயங்கும் மாளிகைக்கு "மன்னர் பூலித்தேவர் மாளிகை" என பெயர் சூட்டினார்.

கருவூலஜோதி எஸ்.எம்.பாண்டியன் அவர்களால் முயன்று கண்டறிந்த மருந்துகளில் மூலமுளை நோயை ஓரிரு நாளில் குணப்படுத்திவிடும் மருந்து மிக அறியதாகும்.

தற்போது ஊத்துமலை ஜமீன்தாராக இருக்கும் கருவூலஜோதி எஸ்.எம். பாண்டியன் அவர்கள் நுணக்கமான பல்கலை வல்லுநர். பாம்பு முதலிய விஷ ஜந்துக்களையும் வசம் செய்யும் ஆற்றலும் தெரிந்தவர். உடல் வலிமைகாட்டும் சிலம்பம் முதலிய கலை வல்லவர்.

ஒருமுறை ஜமீன்தாருடன் சென்ற அரிஜன மக்களை குற்றாலம் திருக்குற்றாலநாதர் குழல்வாய்மொழி அம்மை கோவில் பணியாளர்கள் "இன்று சமபந்தி நடக்குது. நீங்கள் எல்லோரும் கோவிலுக்கு சாப்பிட வாருங்கள்" என்று அழைக்க அதிலொருவர் "சமபந்தின்னா என்ன" என்று கேட்க ஆலய பணியாளர் "ஜாதி பாகுபாடு இன்றி உங்களோடு எல்லோரும் ஒன்றாக அமர்ந்து சாப்பிடுவது" என்று விபரம் கூறியதும் அவர், கூறியதாவது, "நீங்கள் புதியதாக அதுவும் இன்று மட்டும் சாப்பாடு போடுகிறீர்கள். நாங்கள் இவர்களோடு எப்பவுமே வேறுபாடு இன்றி ஒன்றாக இருந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கிறோம்"என்று.

சிவகிரியில் நடைபெற்ற இன கலவர சமாதான கூட்டம் திருநெல்வேலி கலெக்டர் பங்களாவில் நடைபெற்ற சமயம் தேவர் இனத்தவர் சாராயம் விற்பதாகவும் அவர்களை தண்டிக்க வேண்டும் என்று எதிர் தரப்பினர் கேட்டுக்கொள்ள கலெக்டரும், S.P.யும் பெயர்களை கேட்டு எழுத அதுசமயம்

கருவூலஜோதி S.M. பாண்டியன் எழுந்து எந்த இடத்தில் விற்கப்படுகிறது என கேட்க தங்கள் குடியிருப்பு பகுதி ஓரத்தில் விற்கப்படுகிறது என எதிர் தரப்பினர் கூற நீங்கள் குடிப்பதால்தான் விற்கப்படுகிறது. நீங்கள் குடிப்பதை நிறுத்தினால் விற்க முடியாது. குடிக்காதீர்கள் என ஜமீனர்தார் அறிவுரை கூறி விற்றவர்களையும் காப்பாற்றினார்.

அச்சன் புதூர், நெடுவேலியில் இஸ்லாமியர்களுக்கும் இந்துக்களுக்கும் ஏற்பட்ட ஆக்கிரமிப்பு பிரச்சனையில் குற்றாலத்தில் கலெக்டர், S.P. முன்னி யில் நடந்த கூட்டத்தில் கருவூலஜோதி S.M. பாண்டியன் தலையிட்டு சமூகநிலையை ஏற்படுத்தி பஸ் ஸ்டாப்பில் பயணிகள் தங்கும் கட்டிடம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இதே போல் கழநீர்குளம் கிராமத்தில் மதம் மாறிய காலத்தில் மாறியவர்களால் அடைக்கப்பட்ட பாதையை திறக்க வழிசெய்தார்.

இடதமடையார்குளத்திலும், அண்ணாமலைபுதூரிலும் புதிய பள்ளிக்கூடம் ஏற்படவும் ஊத்துமலையில் Higher Secondary வகுப்புகள் ஏற்படவும் காரணமாக இருந்தார். இவ்வாறு பல்வேறு நற்காரியங்கள் செய்து கொண்டிருக்கிறார்.

இதிலிருந்து கருவூலஜோதி S.M. பாண்டியன் ஜாதி மத ஏற்றதாழ்வு பார்க்காதவர் என்பது தெரியவருகிறது. பழகுவதற்கு மிகவும் இனியவர்.

வேங்கைப்புலி (Tiger) போன்று கோடுகளை உடைய வேட்டையாடும் ஒரு ஜோடி நாய்கள் சேத்தூர் மன்னரால் ஊத்துமலை மன்னருக்கு வேட்டையாடும் திறனை பாராட்டி பரிசாக கொடுக்கப்பட்டது.

உலகில் அதிக வேகமாக ஓடக்கூடிய கண்ணிநாய் என்ற ஜாதி ஒரு ஜோடியை முயல் வேட்டைக்காக லண்டனிலிருந்து ஜமீன்தார் வரவழைத்து ரெட்டியார் சமூகத்தவரிடம் கொடுத்து வேட்டையாடினார். சண்முகாபுரம் ரெட்டியார்கள் ஷ நாய் குட்டிகளை விற்றும் கலப்படமாக்கியும் ஒரிஜினல் இல்லாதாக்கிவிட்டனர்.

அன்னார் மதிக்கின்ற விலங்கு ஆண்யானை. பிரியமானது வேங்கைப்புலி (Tiger) பாம்பு. அரண்மனையில் வேங்கைப்புலி (Tiger), சிறுத்தை (Panther), கரடிகள் வளர்க்கப்பட்டது. சுத்தமான வெள்ளை நிறத்தில் காகம், செண்பககாத்தான், சாரைப்பாம்பு,

வெள்ளை மயில்கள், வெள்ளை மான், இரட்டைவால் பல்லி, இரட்டைவால் அரணை, 4 கால் உடைய சேவல்,

மருவில் 6 காம்பு உடைய பசு, முதலை, ஆப்பிரிக்க குரங்குகள் இன்னும் பல அபூர்வமானது இருந்தது. Zoo இருந்தது. கெங்கைகொண்டான் மான் பூங்கா உருவாவதற்கு ஜமீன் Zoo விலிருந்துதான் முதலில் புள்ளிமான்கள், மிளாக்கள் கொடுக்கப்பட்டது.

இலவன்குளம் கிராமத்திலிருந்து ஜெகவீரபத்திரரும் மக்கள் கருமசண்டாளன்காளமுத்து தேவர் பூலியப்பத்தேவர்,அரியத்தேவர் ஆகியோருடன் பசுக்கள் மேய்க்க தூத்துக்குடி பகுதிக்கு செல்ல அவர்கள் பசுக்கள் ஐந்து கட்டபொம்மன் மாடுகளுடன் சேர அதை மீட்க சென்ற போது சில நிகழ்ச்சிக்குப்பின் சினேகிதம் ஏற்பட்டு செவல், கரிசல் நிலங்களையும் அதிகமான பசுக்களையும் கட்டபொம்மன் வழங்கினான். அன்றுமுதல் இவர்கள் தாவழம் கொண்டு இருக்கின்ற இடம் தான் இன்றைய மறவன்மடம். ஒரு சமயம் கட்டபொம்மன் படையினரை பாளையங்கோட்டை சிறைச்சாலையிலிருந்து தனது மாந்திரீக சக்தியால் இரவோடு இரவாக வெளிக் கொண்டுவந்ததை எட்டப்பர் மூலம் அறிந்த ஆங்கிலேயர் மறவன் மடத்தாரை பிடித்து வர ஏவினர். இது அறிந்து ஊத்துமலை மன்னரை வீரகேரளம்புதூர் அரண்மனைக்கு சென்று ஷ சகோதரர்கள் அனுக மன்னர் ஆங்கிலேயரிடம் நேரடியாக சென்று "மறவன் மடத்தார் எனது நெறுங்கிய சொந்தக்காரர்கள்" என்றும் "அவர்களுக்கு துன்பம் வருவதை ஏற்க இயலாது" என்றும் உறுதிபட கூறியதன் பேரில் ஆங்கிலேயர் அமைதியாக இருந்துவிட்டனர்.

மறவன்மடம் கருமசண்டாளன் காளமுத்துதேவர் மந்திர. மாந்திரீக சத்தியில் பிரபலமானவர். ஊத்துமலை மன்னரிடம் வேங்கைப்புலி (Tiger) தோலும், புள்ளிமான் தோலும், தர்பை ஆசனத்தோடு நவஆசன பொருட்கள் பெற்று பூஜித்து அ த ி க வலுப்பெற்ற விபரம் அவர்கள் இல்லத்தில் இருக்கும் ஓலைச் சுவடியில் உள்ளது. இப்போது "சக்தி" என்பவர் பூஜை காரியத்தின் மூலம் பிணிகளை போக்கி கொண்டிருக்கிறார்.

இந்திய விடுதலைப்போருக்கு முதல் வித்தை ஊன்றிய மாவீரன் பூலித்தேவன் மீது அதிக பற்றும், பாசமும் கொண்டவர். மாவீரனின் மறைந்த வரலாற்றை வெளியே கொண்டுவர துடியாய் துடித்தவர். அதற்காக ஏராளமான பணத்தை செலவு செய்து வருகிறார். மாவீரன் பூலித்தேவனின் இயக்கத்தின் தலைவராகச் செயல்பட்டு வருகிறார் கருவூலஜோதி S.M.பாண்டியன்.

மன்னன் பூலிதேவன் பற்றி ஏராளமானோர் புத்தகம் எழுதியுள்ளனர். ஆனாலும் அரசு உணரும் பலகாரியம் செய்து நெல்கட்டும் செவலில் கோட்டையும் சிலையும் உருவாக மூலகாரணமாக செயல்பட்டவர் கருவூலஜோதி எஸ்.எம். பாண்டியன் ஆவார்.

சுதந்திர போராட்ட வீரர்களுக்கு அரசு உதவுவது போல் மன்னர் பூலித்தேவர் வாரிசுகளுக்கு உதவ வம்சாவழி பட்டியலை தயாரிக்க குழு ஒன்றை அரசு ஏற்படுத்தியது. மன்னர் பூலிதேவர் சிலை, அரண்மனை ஐ நெற்கட்டும் செவலில் அரசு திறப்புவிழா நடக்கின்றவரை வம்சாவழியினரை கண்டறியும் குழுவின் வேலை மிக மிக துரிதமாக நடைபெற்றுக்கொண்டிருந்தது. ஷ பணி முழுவதுமாக கண்டறியப்பட்டு Final Statement எழுதி அரசுக்கு அனுப்பும் நிலையில் ஷ திறப்பு விழாவுக்குப்பின் அனைத்து ரிக்கார்டுகளும் 15.3.1999 அன்று பெட்டியில் வைத்து பூட்டி கலெக்டர் ஆபீஸ் K செக்சனில் வைக்கப்பட்டது. இதை கருவூலஜோதி எஸ்.எம்.பாண்டியன் அவர்கள் அரசுக்கு எழுதி வம்சாவழியினர் கண்டறியப்பட பயனடைய முயன்று கொண்டிருக்கிறார்கள்.



நெல்கட்டும் செவலில் மன்னர் பூலித்தேவன் மாளிகை தமிழக முதல்வரால் திறந்து வைக்கும் வைபவத்தில் ஊத்துமலை மன்னர் கருவூலஜோதிS.M.பாண்டியன் 28.12.1998

ஊத்துமலை மன்னர் கருவூலஜோதி S.M.பாண்டியன் க்கு நல்லறிவுரைகளும், ஆலோசனையும், வழிகாட்டியாகவும் தென்காசி திருவாளர் T.S.ராமநாதஐயர் அவர்கள் இருந்து வருவதோடு பரம்பரை ஜமீன் வக்கீலாக அவரும் இல்லத்தார்களும் இருக்கின்றனர், பெரியவரின் வயது 92 (மே1908).

மேற்கண்டவாறு அவரின் செயல்பாடுகளை அடுக்கிக் கொண்டே செல்லலாம். அவரின் காரியங்களை குங்குமம் 11.12. 1998 இதழில் வெயிட்டும் உள்ளது. அன்னாரின் செயல்பாடுகளைப் பார்த்து அதிசயித்துப் போன நான், அவரை நேரில் சந்தித்துப் பேசவேண்டும் என்னும் ஆவலில் காலை 8 மணிக்கு வீரகேரளம்புதூர் அரண்மனைக்குச் சென்றேன். அந்த நேரத்தில் ஜமீன்தார் தூங்கிக்கொண்டு இருப்பதாகப் பணியாட்கள் சொன்னார்கள்.

சுமார் 11 மணி வரையிலும் காத்திருந்தேன். என்னுடைய பொறுமையும் எல்லை தாண்டலாயிற்று. இருப்பினும் எப்படியும் ஜமீன்தாரைப் பார்க்காமல் சென்று விடக்கூடாது என்னும் வைராக்கியத்தில் என்னை நானே சமாதானம் செய்து கொண்டு இருந்துவிட்டேன்.

சற்று நேரத்தில் ஜமீன்தார் எழுந்துவிட்டார், வந்துவிடுவார் என்று பணியாள் கூறினார். ஓரிரு நிமிடத்தில், குகையிலிருந்து வெளிவரும் சிங்கத்தைப்போல் ஜமீன்தார் கருவூலஜோதி எஸ்.எம். பாண்டியன் வெளிவந்து இருக்கையில் அமர்ந்தார். ஜமீன்தாரின் உடலிலும், முகத்திலும் இரத்தக் காயங்கள் இருந்தன. வணக்கம் செலுத்தினேன், பதிலுக்கு அவரும் வணக்கம் செலுத்தினார். வழக்கமாக அதிகாலை 4½ மணிக்கு பணிகளைப் கவனிக்கும் நான் தங்களை இவ்வளவு நேரமாகக் காக்க வைத்ததற்கு வருந்துகிறேன். நேற்று இரவு திருச்செந்தூரிலிருந்து வரும்போது, எனது வண்டியிலிந்து கீழே விழுந்துவிட்டேன். அதனால் ஏற்பட்ட காயங்களே இவைகள் என்று கூறினார். இந்த நேரத்தில் தொந்தரவு கொடுத்துவிட்டோமே என்ற வருத்தம் எனக்கு ஆனால், முந்தைய ஜமீன்தார் மருதப்பத்தேவர், தமிழ் தாத்தா உ.வே.சாமிநாதஐயருக்கு மரியாதை கொடுத்ததைப் போல், எக்குறைவும் இன்றி என்னையும் மதித்து மரியாதை கொடுத்தார். அத்தகைய உயர்ந்த பண்புகளை நிறையப் பெற்றவர் கருவூலஜோதி எஸ்.எம். பாண்டியன் அவர்கள்.

சங்கரன்கோவிலில் நடைபெற்ற தேவர் பேரவை கூட்டத் (8.9.1991)தில் எனக்கு " பூலித்தேவன் வரலாற்று ஆராச்சியாளர்" என்ற பட்டத்தை கருவூலஜோதி

எஸ்.எம். பாண்டியனால் வழங்கப்பட்டு சிறப்பிக்கப்பட்டேன்.

சங்கரன்கோவில் திருவிழா என்றால் அனைவரின் நினைவுக்கு வருவது ஆடித்தபசு திருவிழாவாகும். அரியும், சிவனும் ஒருவரேதான் என்பதை உலகிற்கு உணர்த்தும் வகையில் இந்தத் திருவிழா உள்ளது.

மகாவிஷ்னுவின் சகோதரி சிவனின் மனைவி. பிறந்த வீட்டு பக்தர்களுக்கும் புகுந்த வீட்டு பக்தர்களும் ஒருவருக்கொருவர் பக்தி பரவசத்தில் தான் வணங்கும் தெய்வம்தான் பெரியது என சண்டையிட்டுக் கொள்வதைத் தீர்க்க தன் கணவனாகிய சிவனை கோமதி வேண்டிக்கொண்டதின் காரணமாக பூலோகத்தில் பொதிகை மலைச் சாரலில் உள்ள புன்னை வனத்தலமாகிய இன்றைய சங்கர நயினார் கோயிலில் அம்பாள் தவம் செய்தார். அம்மையின் தவத்திறகு இணங்கி சிவபெருமான் ஆடித்திங்கள் பௌர்ணமியுடன், உத்திராட நட்சத்திரமும் கூடிய நன்னாளில் நாராயணமூர்த்தியுடன் பொருந்தியிருக்கும் சங்கரநாராயணத் திருமேனியை அன்னை கோமதிக்கு காட்டி அருளினார், ஆவுடைத்தாய் தவமிருந்து சங்கரநாராயணத்திருமேனியை தரிசித்த அருட்செயலை நினைவு கூறும் முகத்தான் நடைபெறும் ஆடித்தபசு விழாவை நாம் அனைவரும் கண்டுகளித்து வணங்கி நற்பயனடைந்து வருகிறோம். பக்தர்கள் சண்டையும் தீர்ந்தது.

தபசுத்திருநாள் ஆண்டுதோறும் இலட்சக்கணக்கான மக்கள் கூடி பக்திப் பரவசத்தால் கண்டுகளிக்கும் விழாவாகும். வணிகப் பெருமக்கள் தங்கள் வாணிகம் பெருக வேண்டியும், விவசாயிகள் தங்கள் விளைச்சலைப் பெருக்க வேண்டியும் நடைபெறும் திருவிழா ஆடித்தபசு திருவிழாவாகும். விளைபொருட்களை தபசு பயனடையும் சமயம் அம்மன் சப்பரம் மீது பக்தர்கள் தூவி காணிக்கை செலுத்துகின்றனர்.

விஷ்னுவின் சகோதரி தபசு இருப்பதனால் தபசுக்கு பொருட்களை பிறந்த வீட்டிலிருந்து (ஊத்துமலை ஸ்ரீ நவநீதகிஷ்ண சுவாமி கோவிலிருந்து) ஜமீன்தார் சங்கரன்கோவிலுக்கு கொண்டு சென்று ஆடித்தபசு திருவிழா அன்று ஊற்றுமலை ஜமீன் தபசு மண்டபத்தில் ஸ்ரீ கோமதி அம்பாள் தங்கச் சப்பரத்தில் தபசு இருப்பதற்கு அழைத்து வர அழைப்புச்சுருள். (தபசு அபிஷேக, அலங்கார சாமான்களுடன் ஜவ்வாது, சந்தனம், விபூதி பைகள்,



ஜமீன் செய்யும் மண்டகப்படி
நிகழ்ச்சியை விளக்கும் படம்.

எலுமிச்சம்பழமாலை, பட்டு பரிவட்டம், சவுரிமுடி, புஷ்ப வகை மற்றும் இதர பொருள்கள் சகிதம்)
கோவிலுக்கு கொண்டுசென்று தபசு அலங்காரம் செய்யப்பட்டு
ஜமீன்தார் பரிவராங்களுடன் முன் செல்ல கோமதி அம்பாள் வீதி உலா வந்து "ஊத்துமலை ஜமீன் தபசு மண்டபத்தில் தங்க சப்பரத்தில் (ஆவுடையம்மை, உமையம்மையாக) தபசு இருக்கச் செய்யப்படுகிறது.
மாலை ஸ்ரீ அம்பாள் தங்க சப்பரத்தில் ஸ்ரீ சுவாமியை வலம்வந்து தவப்பயன் அடைதல். மாலை மாற்றல், பரிவட்டம், திருக்கண், ஸ்ரீ அம்பாள் சப்பரத்தில் சென்று வலம் வருதல். இரவு ஸ்ரீ சுவாமியை ஸ்ரீ அம்பாள் தங்க சப்பரத்தில் சென்று வலம்வந்துதிரிசித்தல். மாலை மாற்றல், பரிவட்டம், திருக்கண் அம்பாளை கோவிலில் கொண்டு ஜமீன்தார் முன்நின்று சேர்க்கிறார். மறுதினம் ஸ்ரீ கோமதி அம்பாளின் சப்பரத்தை பட்டிணப் பிரவேசத்துக்கு புஸ்ப அலங்காரம் செய்து வீதி உலா வந்து கோயிலில் ஜமீன்தார் சேர்க்கிறார்.

மூன்று தினம் எண்ணெய் காப்பு நிகழ்ச்சிக்குப் பின் பள்ளியறைச் சிறப்பு மண்டகப்படி (நிறைகுடம் பசும்பால், தேங்காய் பருமன் உள்ள லட்டு, தோசைக்கல் அளவுக்கு குறையாத தேன்குழல், அதிரசம், கனி வர்க்கங்கள், புஷ்பங்கள் வைத்து பூஜித்து) நிகழ்ச்சிகளையும் ஜமீன்தார் முன் நின்று செய்வது அனைத்தும் பெருமைக்குரியதாகும். ஸ்ரீ அம்பாள் தவப்பயன் அடைந்து (தபசு மண்டபத்துக்கு வந்ததும்) ஊத்துமலை ஜமீன்தார் கருவூலஜோதி எஸ்.எம். பாண்டியன் அவர்கள் சுருள் பிரசாதம் பாகுபாடு இன்றி அனைவருக்கும் வழங்கிக்கொண்டிருக்கிறார். மதியம் அன்னதானமும் வழங்கிக்கொண்டிருக்கிறார்.

ஆடித்தபசு விழா ஆண்டுதோறும் சீரும்சிறப்புமாக நடைபெற்று வருகிறது.

இத்தகு சிறப்பு மிகு ஆடித்தபசு விழாவை ஊத்துமலை ஜமீன்தார் கருவூலஜோதி

எஸ்.எம். பாண்டியன் அவர்கள் நடத்திவருகிறார்கள். ஒரு சிறிதும் தொய்வில்லாமல் தொடர்ந்து பரம்பரை, பரம்பரையாக நடத்திவந்ததை இப்பவும் மிகச் சிறப்பாக நடத்திவரும் சிறப்பினை அனைவரும் பாராட்டுகின்றனர்.

ஊத்துமலை ஜமீன்தார்களால் சங்கரன்கோவிலில் நடைபெற்று வருகிற ஆடித்தபசு விழா சரியாக இன்றிலிருந்து 826 ஆண்டுகளுக்கு முந்தய பழமைச் சிறப்புடையது. கொல்லம் ஆண்டு 348 ம் ஆண்டு (சமமான ஆங்கில ஆண்டு 1173) சீவலமாறபாண்டிய மன்னரால் அருளிச்செய்யப் பெற்ற சங்கரநாராயணசாமி கோவில் புராணம் என்ற அரிய நூல் ஆறாம் பதிப்பு வள்ளுவர் ஆண்டு 1990, ஆகஸ்ட்டு 1958ல் திருநெல்வேலி ஜங்சன் கணேசன் அச்சகத்தில் பதிப்பிக்கப்பெற்றது. இதன் பக்கம் 44ல்

"இத்தகையுடைய
தவசுமண் டபந்தா னியற்றிய வேந்தன்யா ரென்னின்,
முத்தமிழ்ச் சங்கமுன் றுடனானுன்கா முறைபெற வளர்த்த
துமு துகில், வைத்திடு மூற்று மலைக்கர சரிமை
மன்னன் மருதப்ப வள்ளல், பாத்தியாற் செய்திங் கோழிரண்
டுலகும் பரப்பினன் றன்புகழ் பரப்பே"

இதிலிருந்து தபசு மண்டபத்தை ஊத்துமலை மன்னர் கட்டி தபசு திருவிழா நடத்திவருகிறார் என்பது தெரிய வருகிறது. பள்ளியறைக்கு ஊஞ்சல் செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது.

தென்னாட்டில் 18ம் நூற்றாண்டில் குறுநில மன்னர்களென்று கருதப்பட்டு வந்த பாளையக்காரர்களின் ஆட்சி நடைபெற்று வந்தன. அவர்களின் வரலாறு மறைக்கப்பட்டு அழிந்து போய்க்கொண்டிருக்கிறது. இதனால் தென்னாட்டு குறுநிலமன்னர்கள் வரலாறும் அழிந்துவிட்டது என்றுதான் சொல்லவேண்டும். ஆகையால் அரசே முனைந்து இந்த வரலாறுகளை வெளியில் கொண்டுவரவேண்டும். இது மிகவும் இன்றியமையாததாகும். அத்தகைய அரிய முயற்சியை ஊத்துமலை ஜமீன்தார் கருவூலஜோதி எஸ்.எம்.பாண்டியன் அவர்கள் அந்த பணியில் ஈடுபட்டு ஊத்துமலை ஜமீன் வரலாற்றின் ஒரு பகுதியை வெளியிடுவதன் மூலம் தமிழக வரலாற்றுக்குப் பெருமை தேடித்தந்துள்ளார். அவருடைய தொண்டு மென்மேலும் சிறக்க வாழ்த்துகிறோம்.

ஊத்துமலை ஜமீன்தார் வம்சாவழியினரும் மாவீரன் பூலித்தேவரின் வம்சாவழியினர் 1800 ஆம் ஆண்டிற்குப் பிறகு கொள்வினை கொடுப்புவினையின் மூலம் ஒன்று சேர்ந்துள்ளது. இதன் பிறகுள்ள ஊத்துமலை ஜமீன் வம்சாவழிப் பட்டியல் கீழ்கண்டவாறு உள்ளது.




குறிப்பு – பூலித்தேவன் பிள்ளைகளுக்கு ஆண்வாரிசு இல்லை. பூலித்தேவன் மகன்கள் சித்திரபுத்திரத்தேவனும் சிவஞானபாண்டியனும் இறந்துவிட்டனர். கோமதி முத்து தலவச்சி ஆட்சி பொறுப்பை ஏற்றார். தன்னுடைய சகோதரன் சிவஞான பாண்டியனின் ஒரே வாரிசான பெண்ணை மணியாச்சி அரண்மனையில் சொக்கதலைவருக்கு திருமணம் செய்து கொடுத்து அதன் வயிற்றுப்பிள்ளையான சிவஞானத்தேவனை தத்து எடுத்து நெற்கட்டும் செவல் மன்னராக்குகிறார். இவருக்கு இருமனைவியர்

1. கற்றமுடையார் தேவர் மகள் 2. காசித்தேவர் மகள்




குறிப்பு– ம.சுப்பையாத்தேவருக்கு மூன்று மனைவிகள்

முதல்மனைவி – திருக்குறன்குடி ஐயப்பராச தலைவர் சகோதரி வெள்ளைத்துரைச்சி நாச்சியார். இவருக்கு ஒருபெண் குழந்தை மருதநாயக நாச்சியார் (எ) கல்யாணிநாச்சியார் 2வது மனைவி –நெல்கட்டும் செவல் மன்னரின் மூத்த மகள் பெரியதுரைச்சி (எ) சிவஞானநாச்சியார் 3வது மனைவி – தங்கம நாச்சியார் (காடுபட்டி) வாரிசுஇல்லை.

துரைப்பாண்டியன் என்ற பூலி சிவசுப்பிரமணியபாண்டியன்




துரைப்பாண்டிச்சி நாச்சியார் வாரீசு இல்லை

குழந்தைநாச்சியார்

இராசாத்திநாச்சியார்

வெள்ளைத்துரைச்சி நாச்சியார் வாரீசுஇல்லை

குறிப்பு

துரைப்பாண்டியன் என்ற பூலிசிவசுப்பிரமணிய பாண்டியன் அவர்களின் சகோதரி பெரியதுரைச்சி என்ற சிவஞான நாச்சியார் மகனும் ஊத்துமலை ஜமீன்தாருமாகிய சிவஞான மருதப்பபாண்டியன் அவர்களின் மனைவி ஷ துரைப்பாண்டியன் என்ற பூலி சிவசுப்பிரமணிய பாண்டியன் மூத்தமகள் மருதநாயநாச்சியார் ஆவார்.

(கீழ் விபரங்கள் ஜமீன்தார் மூலம் கிடைக்கப்பெற்றது.)

N.H.M.பாண்டியன் (எ) நவநீதகிருஷ்ண இருதாலய மருதப்பபாண்டியன் ஊத்துமலை ஜமீன்தார்

கற்பககசுப்பிரமணிய பாண்டியன்

மீனாட்சிசுந்தர பாண்டியன்

அமலிபுஷ்பம் (எ)செல்லத்தாயார்

குறிப்பு.. N.H.M.பாண்டியன் மனைவி மணியாச்சி ஜமீன் பாண்டிய அரண்மனை கருத்தப்பாண்டியன் பேத்தியும் கடம்பூர் ஜமீன்தார் சகோதரி மகளுமான ராணி ராமதலவச்சி நாச்சியார் ஆவார்.

..கற்பககசுப்பிரமணிய பாண்டியனுக்கு இரண்டு மனைவிகள்
முதல் மனைவி கோட்டூர் ராஜாத்தி (எ) கோட்டூர் முப்பிடாதி குழந்தை நாச்சியார் இவருக்கு மூன்று ஆண்மக்கள்
இரண்டாவது மனைவிக்கு ஒரு பெண் மட்டும்

..பெரியதுரை (எ) பூலி ராமசாமிப்பாண்டியனின் இளையமகள் சின்னதுரைச்சி (எ) ராமதலவச்சிநாச்சியார். இவருக்கு ஒரேமகள் அழகுமுத்து நாச்சியார் (எ) செல்லதுரைச்சி. இவருக்கு
திருமலைராஜகோபாலபாண்டியன் 1,பூலி சின்னதுரைச்சி 2

பூலிசிவஞான பாண்டியன் (எ) தங்கராஜா 3, பூலி ராமத்தலவச்சி (எ) ராஜாத்தி 4, பூலி இருதாலய மருதப்பபாண்டியன் (எ) மருதச்சாமி 5, வானுவாமலை நாச்சியார் (எ) பாண்டிதுரைச்சி 6, கணபதி நாச்சியார் 7, நவநீதகிருஷ்ணலட்சுமிதுரைச்சி (எ) சரஸ்வதி நாச்சியார் 8, என எட்டு பிள்ளைகள்.

இதில் பூலி சின்னதுரைச்சி என்பவரை கற்பககப்பிரமணியபாண்டியன் இரண்டாம் தாரமாக திருமணம் செய்தார். இவருக்கு ஒரு பெண் குழந்தை. ரோகினிநாச்சியார் (எ) பூலி சிவஞான நாச்சியார்.

மீனாட்சி சுந்தரபாண்டியன் இலங்கையைச் சேர்ந்த வேறு இன பெண்ணின் கடைசி மகளை திருமணம் செய்தார்.

N.H.M பாண்டியன்



1 2 3 4

கருவூலஜோதி N.சுப்பையாபாண்டியன் N.தங்கராஜ்பாண்டியன் H.M.பாண்டியன் S.M.பாண்டியன்(எ)
சிவஞானமருதப்பாண்டியன்

முதல் மனைவி

பாபுராஜா தங்ககல்யாணிநாச்சியார்

இரண்டாம் மனைவி

ராஜா(எ) ஸ்ரீலங்கா(எ)மீனாட்சிசுந்தரநாச்சியர் காமர்ஸ் பேபிராஜா
N.H.M.பாண்டியன்ராஜா
(ராணுவம்)

குறிப்பு கருவூலஜோதி S.M.பாண்டியன் முதல்மனைவி தற்போது தலைவன்கோட்டை ஜமீன்தாராகவிளங்கும் திருவாளர். இந்திரராமசாமி பாண்டியன் அவர்கள் தாய்மாமன் மகள் கோமதிநாச்சியார்.
இரண்டாவது மனைவி கொல்லங்கோடு மன்னரின் திவான் அவர்களின் பேத்தி ஸ்ரீ தேவிப்பாண்டியன் பி.லிட்.,(தமிழ்புலவர்) பரதம்,ரிக்,யஜூர்,சாமம் பயிற்சிபெற்றவர். தெய்வவழிபாடு மிக்கவர்.(நம்பூதிரி)

இவ்விருவரும் தங்களின் வேவ்வேறு விதமான செயல்பாடுகளால் ஜமீன்தாரை விட்டு சென்றுவிட்டனர்.

தலைவன்கோட்டை ஜமீன்தார் அவர்கள் பினக்கருத்த பெருவுடையார்கோவில் @ ஸ்ரீ மத்தியஸ்தநாத சுவாமி கோவில் –ன் பரம்பரை தர்மகர்த்தா ஆவார்கள். ஷ இந்திர ராமசாமி பாண்டியன் ஊத்துமலை ஜமீன்தார் கருவூலஜோதி S.M. பாண்டியன் மீது அதிக பாசம் கொண்டவர்.

2. சுப்பையாபாண்டியன்

முதல் மனைவி(நாயக்கர்) இரண்டாம் மனைவி(நாடார்) மூன்றாம்மனைவி

இரண்டு மகன்கள்

ஒரு மகன்

தற்போதைய மணியாச்சி ஜமீன்தார் பூலோகபாண்டியன் மூத்த தங்கை

3. N.தங்கராஜ்பாண்டியன்

மூன்று பெண்கள் ஒரு ஆண்

4. H.M.பாண்டியன் என்ற இருதாலய மருதப்பபாண்டியன் @ குட்டிராஜா
மனைவி Dr. ஆனந்தவல்லி M.B.B.S., D.P.M., (வெள்ளாளர்)

அர்ஜுன்ராஜா ஆனந்த் நவநீதராஜா

மேற்கண்டவாறு மாவீரன் பூலித்தேவனின் வம்சாவழியும் ஊத்துமலை ஜமீன் வம்சாவழியும் இணைந்துள்ளது. இதேபோல மணியாச்சி ஜமீனும் கடம்பூர் ஜமீனும் தலைவன்கோட்டை ஜமீனும் ஊத்துமலை ஜமீனுடன் உறவில் இணைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இன்றைய கருவூலஜோதி S.M. பாண்டியன் கொண்டையன் கோட்டையராக இருந்தபோதும்பாகுபாடு இன்றி மறவரனைவரையும் வயதுக்கு தக்கவாறு உறவுமுறை கூறி வருகிறார்கள் என்பது குறிப்பிடதக்கது.

கட்டுரை எழுதுவதற்கு துணை நின்ற நூல்கள்.


1. நிக்கோலாய் .பி. டெர்க்ஸ் - தென்னிந்திய குறுநில மன்னரின் வரலாறு.
2. ச.வே. சாமிநாதய்யர் - கண்டதும் கேட்டதும்.
3. மறவர் வரலாறு - ஆசீர்வாத உடையார்த் தேவர்.
4. தமிழ் வீரன் பூலித்தேவன் துர்காதாஸ் எஸ்.கே.சுவாமி
5. அண்ணாமலைரெட்டியார் கவிதைத்தொகுப்பு - அரங்கசீனிவாசன்
6. வடகரை ஆதிக்கத்தின் சரித்திரம் - பி.சி.சி. பாண்டியன் - பி.வி.சி. பாண்டியன்
7. ஊத்துமலை ஜமீன் வம்சாவழி - ஓரியண்டல் கையெழுத்துப் பிரதி நூலகம்எண் - 3583
8. பாண்டியர் வரலாறு - சதாசிவ பண்டாரத்தார்.
9. பாண்டியர் வரலாறு - இராசசேகரபாண்டிய தங்கமணி
10. திருநெல்வேலி மாவட்ட குறிப்பு - சோமலெ
11. மாமன்னர் பூலித்தேவன் - டாக்டர்ந.ராசையாஎம்.ஏ.,எம்.எட்.,பி.எச்.டி.

நூல் ஆசிரியர்



| | | |
|---|---|---|
| பெயர் | - | ந.இராசையா |
| பிறப்பு | - | 6.10.1932 |
| பிறந்த ஊர் | - | சேத்தூர் (காமராசர் மாவட்டம்) |
| பெற்றோர் | - | திருமிகு நச்சாடலிங்கம் |
| | | திருமதி. பெத்தம்மாள் |
| மனைவி | - | திருமதி. ஞானமணி |
| கல்வி தகுதி | - | எம்.ஏ., எம்.எட்., பி.எச்.டி., |
| வெளியிடுகள் | - | இந்திய விடுதலைப்போரின் முதல் முழக்கம். |
| | | விடுதலைப்போரில் தாழ்த்தப்பட்டே பங்கு |
| | | மாமன்னன் பூலித்தேவன் |
| | | பதினெட்டாம் நூற்றாண்டின் போர் |
| | | மாவீரன் பூலித்தேவன் |
| | | பூலித்தேவன் கதை பாடல் |
| | | தேவதானம் திருவிழா மலர் |
| அச்சில் | | புதுக்கோட்டைச் சண்டை கதைபாடல் |
| | | மாவீரன் பூலித்தேவன் சிந்து ஆய்வுநூல் |
| | | மருதநாயகம் உண்மை வரலாறு |
| தற்போதைய முகவரி | - | 3-110, அயன் கொல்லங்கொண்டான், |
| | | இராசபாளையம் வட்டம் - 626 142 |
| | | விருதுநகர் மாவட்டம். |

